### அதர்வணவேத

# மாண்டுக்யோபநிஷத்து*

* நூற்றெட்டு உபநிடதங்களினுள்ளே முடிவிலுள்ள முத்திகோப நிடதத்தில், நூற்றெட்டு உபநிடதங்களுள்ளே முப்பத்திரண்டு சிறந்தன என்றும், அம்முப்பத்திரண்டினுள்ளே பத்துச் சிறந்தன என்றும், அப்பத்தினுள்ளே இம்மாண்டுக்யோப நிடதம் சிறந்ததென்றும் கூறப்பட்டிருக்கின்றது

## காண்டம் - 1

1. ஓம் † எனும் அட்சரம் எல்லாவுலகுமாம், அதன் விரிவு சொல்லப்படுகிறது: - இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் நிகழ்வதான உலகமனைத்தும் ஓம் எனும் அட்சரம், முக்காலங்களினு மடங்காத எந்தப்பொருளுண்டோ அதுவே ஓம்.

† ஓம் என்ற சொற்குப் பொருள் பரமசிவமேயாம். "ஓம் நம: சிவாய" எனும் ஸ்ரீருத்திரத்தினும், "த்யாயே தோங்காரம் மீச்வரம்" எனும் தியாநபிந் தூப நிஷத்தானும், "ஒங்காரம் ஸர்வேச்வரம்" எனும் நிருஸிஹ்மோத்தரதா பிந்யுப நிஷத்தானும், "ஓங்காரோவேத பர ஈசோவாசிவ ஏகோத்யேயா" எனும் அதர்வசிகோப நிஷத்தானும், "ஓம் மஹாக்ராஸாய மகாதேவாய சூலினே" எனும் சரபோப நிஷத்தானும், "ஓங்காரஸ்வரூபிணம் மகாதேவம்" எனும் பஸ்மஜாயாலோப நிஷத்தானும், "சிவோமே அஸ்து ஸதாசிவோம்" எனும் தைத்ரீயாருண சாகை நாராயணத்தாலும் அறிக. ஓம் என்பது விஷ்ணுவைக் குறித்திடாதோ வெனின், குறித்திடாது. என்னை? நிருஸிஹ் மோத்தரதாபின் உபநிஷத்தில், "அகாரம்ப்ரஹ்மாணம்," "உகாரம் விஷ்ணும்" "மகாரம் ருத்ரம்" "ஒங்காரம் ஸர்வேச்வரம்" எனக்கூறுமாற்றால் இரண்டாவது மூர்த்தி நாலாவது மூர்த்தியாதலெங்ஙனம் என்க?

2. எல்லாப்பொருள்களினு நிறைந்திருப்பது பிரமம், பிரணவ ரூபியாகிய ஆன்மாவான ‡ பிரமம் நாலுபாத முடையது.

ஈண்டு பிரமத் தினை ஆன்மாவென்றது அங்காங்கி லட்சணை.

## காண்டம் - 2

1. சாக்ராவத்தையிலிருப்பவனாய், (தனக்கன்னியமான) வேறு பொருள்களை யறிபவனாய், (சுவர்க்கம் சூரியன் காற்று ஆகாயம் நீர் பூமி இவைகளின் உருவமாகிய தலை கண் பிராணன் நடுவுடல் உபஸ் தம் கால் என்கிற ஆறும் ஜீவனுமாகிற) ஏழு அங்கங்களோடு கூடின வனாய், (ஞானேந்திரியம் - ரு - கன்மேந்திரியம் - ரு - வாயு - ரு - அந்தக்கரணம் - ச - ஆக) பத்தொன்பது

முகங்களோடு கூடினவனாய், பொருள்க ளனைத்தையும் அனுபவிக்கின்ற மனிதர்களைப் படைக்கின்ற வைச்வாநரனான † பிரமன் ‡ முதற்பாதம்.

---

† பிரமன் இரண்ய நிறத்தனாகலின் வைசுவாநரனென்றனர். இது பண்புவம வாகுபெயர். வைசுவாநரனாவான் அக்கினி, "எஷவா அக்னிவைர் வாநரா " (இந்த அக்கினியே வைசுவாகரன்) எனும் யசுர்வேதம், வைசுவாக ரனைப் பரமாத்மாவாகச்சொல்லும் அவசரமும் சுருதியிலுண்டு. பங்கஜம் என்பது தாமரைக்கும், தவளைக்கும், மாணிக்கத்திற்கும் பெயராயினும் சம்பந்த நோக்கிப் பொருள் செய்யவேண்டுவது போல ஈண்டுப்பிரமனெனக் கொளல் வேண்டும்.

‡ "ஜாகரிதேப்ரஹ்மா ஸ்வப்நேவிஷ்ணுஸ் சுஷப் தௌருத்ரஸ் துரீ ய மக்ஷரம்" எனும் பிரஹ்மோபநிஷத்தால், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யெனும் அவஸ்தாத்திரயங்களுக்குரியர் முறையே பிரமன் விஷ்னு உருத்திரன் எனஸ்பஷ்டமாயிருக்கவும், அவஸ்தாத்திரயங்கட்கு ஸங்கர்ஷணாதியரை இராமாநுஜர் மும்மூர்த்திகளாக்கியது ஆதரணீயமன்று.

---

2. சொப்பனாவத்தையி லிருப்பவனாய், மனத்தாலறியுந் தன்மை யுள்ளவனாய், ஏழு அங்கங்களையுடையவனாய், பத்தொன்பது முகங் களையுடையவனாய், அயலறியாமல் தன்னளவு அனுபவிப்பவனாயுள்ள தைசஜன் என்னும் விஷ்ணு இரண்டாவது பாதம்.

3. எவ்விடத்தில் உறங்கினவன் ஒருபொருளினு மிச்சைவைப்ப தில்லையோ, ஒன்றையும் பார்ப்பதில்லையோ, அந்த இடம் சுழுத்தி, அதில் ஒன்றாயிருப்பவனாய் ஞானசொரூபியாய், ஆனந்த சொரூபி யாய், ஆனந்தத்தை யனுபவிப்பவனாய், மனத்தாலறியத் தக்கவனா யுள்ள பிராஞ்ஞன் என்னும் உருத்திரன் மூன்றாவது பாதம்.

4. இந்தப் பிராஞ்ஞன் சகலத்திற்கும் சர்வேச்சுவரன், இவர் சர்வஞ்ஞன், இவன் அந்திரியாமி, இவன் சகலத்திற்கும் காரணன், இவன் பிராணிகட்குப் பிறப்பும் இறப்பும் (உண்டாக்குபவன்)

5. சாக்கிரம் சொப்பன மிரண்டும் இல்லாததிம், அஞ்ஞான சுழுத்தியில்லாததும், பிரஞ்ஞைக்கு வேறானதும், ஞானத்தைத் தரு வதும், கண் முதலியவற்றிற்குக் கோசரமாகாததும், வாக்வியாபாரத் திற் கெட்டாததும், கரத்திற்குப் பிடிபடாததும், அளவையாலறியா ததும், இத்தகையதெனக் குறிக்கப்படாததும், இஃதென நிச்சயிக் கப்படாததும், ஞானானந்தசொரூபமுடையதும், பிரபஞ்சலயஸ்தான மானதும், சாந்தமாயுமிருக்கிற ¶ சிவம் எனும் அத்வைத வஸ்துவை நான்காவதாக எண்ணுகிறார்கள், அது சர்வாந்திரியாமி, அது அறியத் தக்கது.

¶ இவ்வுப நிடத மூலத்தில், 'ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவமத் வைதம் சதுர்த்த மந்யந்தே' எனப்பெறப்படும் இப்பொருள் களையே பயக்கும் வாக்கியங்கள் நிருஸிஹ்மபூர்வ தாபியுப நிஷத்திலும், உத் தரதா பிந்யுப நிஷத்திலும், " பரபஞ்சசோபசமம் சாந்தம் சிவமத்வை தம் சதுர்த்தம் மங்யாதே'எனவும்; நாரதபரிவ்பாஜ கோப நிஷத்தில் " ப்ரபஞ்சோபசமம் சிவம்சாந்த மத்வைதம் கதுர்த்தம் மந்யந்தே " எனவும், ராமோத்தர தாபி நீயோபநிஷத்தில் " ப்ரத்யய ஸாரம் ப்ர பஞ் சோபசமம் சாந்தம் சிவமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே " என வும் வருகின்றன. நான்காவது தெய்வத்தை விளக்கு நிமித்தம் " சதுர்த்தம்'என்னும் வாக்கியத்தோடு வெளிப்படும் வசனங்கடோறுமிருக்குந் தெய்வப்பெயர் “ சிவம்" என்பதன்றி நாராயணனாதி நாமங் களில் யாது மின்றென்பது வெளிப் படையாகலின், நாராயணனை நான்காத் தெய்வமாக வேதம் விதித்ததில்லை. இவ்வுப நிடத வாக்கிய திற்கு அர்த்தஞ் செய்த இராமாநுஜர் சிவம் என்பதற்கு மங்கள சொரூபனென்றும், சதுர்த்த மென்பதற்குச் சங்கர்ஷணபிரத்யும்ந அநிருத்தரெனும் மூவர்க்கும் லயஸ்தானமான வாசுதேவனென்றும் பொருள் கொண்டனர்." அத்வைதம்சதுர்த்தம் பிரஹ்மவிஷ்ணுருத்ராதீத மேகமாசாஸ்யம் பகவந்தக்சிவம்'(அந்நான்காந் தெய்வம்பிரமன் விஷ்ணு உருத்திரனெனும் மூவரின் மேம்பட்ட சிவம்) என பஸ்மஜாபால வசனம் இனிது விளக்கினமையின், இராமாநுஜர் அர்த்தம் அனர்த்தமாம். அன்றியும் ,'தஜாயதேம்ரியயதே" (ஜீவனுக்கு உற்பத்திநாசங்களில்லை) என்ற வேதவசனத்திற்கு முரணாக வாசுதேவனிடத்திலி'ருந்து சங்கர்ஷணன் உண்டாயினானென்றும். அவன் ஜீவனென்றும், ப்ரத்யுமநன் மனசென்றும், அநிருத்தன் அகங்காரனென்றும் பாஞ்சராத்திரம் கூறலின், இவர்களை மும்மூர்த்திகள் ஸ்தானத்தில்வைத்த இராமாநுஜர் கொள்கை அஸமஞ்ஜஸமாம்.

## காண்டம் - 3.

1. அட்சரங்களிலும் மாத்திரைகளிலு மிருக்கிற நாதசொரூபமான ஓங்காரம் பரமாத்மா, அகாரம் உகாரம் மகாரம் நாதம் ஆகிற மாத் திரைகள் நாலும்பாதங்கள்.

2. சாக்கிரஸ்தானத்திலிருக்கிற வைசுவாதரனான பிரமா அகார மாகிய முதல்மாத்திரை, வியாபக முடைமையானும், ஆதியுடைமை யானும் இங்ஙனம் சொல்லப்படும், எவனிவ்வாறு அறிவனோ அவன் சகல விச்சைகளையும் அடைகிறான் முதல்வனுமாகிறான்.

3. சுவப்பன தானத்திலிருக்கிற தைஜஸனான விஷ்னு உகார மாகிய இரண்டாவது மாத்திரை. உத்திருஷ்டமானதாலும், இருதன் மையுடைமை யானும் இங்ஙனம் சொல்லப்பட்டது, எவனிவ்வாறு அறிவனோ அவன் ஞானசந்தியிலும் அதிசயத்திலும் சமானவனாகினான், இவன் வம்சத்தில் பிரமஞான மில்லாதவன் பிறப்பதில்லை.

4. சுழுப்தி தானத்திலிருக்கிற பிராஞ்ஞுன் உருத்திரன் மகார மாகிய மூன்றாவது மாத்திரை, அளவிடப் படுகின்றமையானும், இலயத்தையடைகின் றமையானும் இங்ஙனம் சொல்லப்பட்டது, எவனிவ்வாறு அறிவனோ அவன் எல்லாவற்றையு மளக்கிறான், இலய முண்டாகிறது.

## காண்டம் - 4

அளவிலனாய், வாக்வியாபாரத்திற் கரியனாய், பிரபஞ்சலயஸ் தானமாய், சிவமாய், அத்வைதமாய் (அந்தர்) ஆத்மாவாயிருக்கிற இது பிரணவமே § யாம், எவனிதையறிகிறானோ அவன் பரமாத்மானுக் கிரகத்தால் பரமாத்மாவை யடைகிறான்.

---

§ ஈண்டும் சிவம் பிரணவமே என்றதைக் கவனிக்க. அன்றியும் இவ்வுப் நிடதசம் பந்தமாயேற்பட்டுள்ள கவுடபாத காரிகையினும்,'பரணவ மீன்வ வரம், " சிவோமத்வைத ஏவ் " மோங்காரம், பவ : ஓங்காரரோ" எனும் வசனங் களையுங் காண்க.

---

மணவழகு.

சித்தாந்தம் - 1914 ஹு - நவம்பர் மீ